இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின் ;—சிறப்புப்பாயிர முணர்த்துதனுதலிற்று. என்னை "வணக்கமதிகாரமென்றிரண்டுஞ்சொல்லச், சிறப்பெனும்பாயிரமாம்" என்றாராகலின்.

சூத்திரப்பொருளுரைக்கின்றுழிச் சூத்திரத்தின்விகற்பமும், சூத்திரமென்றசொற்குப் பொருளுமுரைத்துரைக்கப்படும்.

சூத்திரம் ஆறுவகைப்படும்: பெயர்ச்சூத்திரம், விதிச்சூத்திரம் விலக்கியற்சூத்திரம், நியமச்சூத்திரம், அதிகாரச்சூத்திரம், ஞாபகச்சூத்திரம் என. (பெயரே தொகையே யென்பவாகலின்). அவற்றுள்,

**பெயர்ச் சூத்திரமாவது** ;—இடுகுறியானும், காரணக்குறியானும் இலக்கணங்கட் கோருபகார நோக்கி யஃதிதற்குப்பெயரென்றிடுவது.

**விதிச்சூத்திரமாவது** ;—இன்னதொன்றிற் கிதுவாமென்றுமுன்னில, தனைமொழிவதாகும்.

**விலக்கியற்சூத்திரமாவது** ;—பொதுவகையான் விதிக்கப்பட்டதனை யிவ்வழி யாகாதென்பது.

**நியமச்சூத்திரமாவது** ;—முன்னொன்றனை முடியவைத்துப் பின்னுமதனையேயெடுத்துக்கொண்டு விதிமுகத்தால் விலக்குவதூஉம், விலக்குதலைவகையால் விதிப்பதூஉமெனக்கொள்க.

**அதிகாரச்சூத்திரமாவது** ;—ஆற்றொழுக்கு அரிமாநோக்குச் சார்ச்சிவழியொழுகுதலும் தவளைப்பாய்த்துளும்போன்று எற்கும்வகையாலியைந்துபொருள்விளைப்பது.

**ஞாபகச்சூத்திரமாவது** ;—எளிதுஞ் சிறிதுமாக வியற்றற் பாலதனை யரிதும்பெரிதுமாக வியற்றிப் பிறிதொருபொருளையறிவிப்பது.

பரிபாடைச் சூத்திரமென்பனவுமுள. அவையீண்டுத் தந்திரவுத்தியுள்ளே பட்டடங்கும் என்க. இவற்றைவிகற்பித்தும் பலவிதப்படுத்துச்சொல்லுவாருமுளர்.

முதற்சூத்திரம் நான்குவகைப்படும் : வழிபடுதெய்வ வணக்கஞ்செய்தலும், மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்தலும், தொகைவகை விரியானுதலிப்புகுதலும், சொலத்தகும் பொருளை யெடுத்துரைத்தலும் என.

இனிச் சூத்திரமென்ற சொற்குப் பொருளுரைக்குமாறு : எற்புடைப்பொருளெல்லாந் தோற்றுமாறு சூத்திரித்து நடாத்துதலிற் சூத்திரமெனப்படும். அது வடமொழித்திரிசொல்லெனக்கொள்க.

சூத்திரப்பொருளுரைக்கின்றுழிப் பலதிறத்தானுமுரைப்ப. என்னை : "முத்திறத்தானுமூவிருவிகற்பினும், பத்துவிதத்தானும் பதின்மூன்றுதிறத்தானு, மெழுவகையானு மிரண்டுகூற்றானும், வழுவுநனி

நீங்க மாண்பொடுமதத்தொடும், யாப்புறத் துரைப்பது சூத்திரவுரையே" என்பதாதலின். அவற்றுள்,—

**முத்திறமாவன**,—பொழிப்பகலநுட்பமெனவிவை.

**மூவிருவிகற்பமாவன**,—எடுத்துக்காட்டல், பதம்விரித்தல், பதப பொருளுரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங்கூறல் எனவிவை.

**பத்துவிதமாவன**,—"சொல்லேசொற்பொருள் சோதனைமறைநிலை, யிலேசேயெச்ச நோக்கேதுணிபே, கருத்தே செலுத்துத லென்றீரைந்து, இளவியு நெறிப்படவருவது, பனுவலுரையெனப் பகர்ந்தனர் சான்றோர்" எனவிவை.

**பதின்மூன்றுவிதமாவன**,—சூத்திரந்தோற்றல், சொல்வகுத்தல், சொற்பொருளுரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங்காட்டல், உதாரணங்காட்டல், ஆசிரியவசனங்காட்டல், அதிகாரவரவு காட்டல், தொகுத்துமுடித்தல், விரித்துக்காட்டல், துணிவுகூறல், பயனொடுபுணர்த்தல், எனவிவை.

**எழுவகையாவன**,—பொழிப்பு, அகலம், நுட்பம், நூலெச்சம், பதப்பொருளுரைத்தல், எற்புழிக்காட்டல், எண்ணல் எனவிவை.

**இரண்டுகூறுவன**,—தொகுத்துக்கண்ணழித்தல், விரித்துக்கொணர்ந்துரைத்தல் எனவிவை.

**வழுவாவன**,—குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியது கூறல், மாறுகொளக்கூறல், வழூஉச்சொற்புணர்த்தல், மயங்கவைத்தல், வெற்றெனத்தொடுத்தல், மற்றொன்றுவிரித்தல், சென்றுதேய்ந்திறுதல், நின்றுபயனின்மை எனவிவை.

**மாண்பாவன**,—சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின்வைத்தல், உலகமலையாமை, விழுமியதுபயத்தல், விளங்கியவுதாரணத்ததாதல் எனவிவை.

**எழுவகையாசிரியமதமாவன**,—உடன்படுதல், மறுத்தல், பிறமதமேற்கொண்டுகளைதல், தாஅனுட்டித்தன்மதநிறுத்தல், இருவர்மாறுகொண்டதொருதலைதுணிதல், பிறநூற்குற்றங்காட்டல், பிறிதொடுபடாஅன்றன்மதம்வகுத்தல் எனவிவை.

இவ்வகையேபுகுந்தன புகுந்தன பரப்பியுரைப்பான்புகிலிறந்துபட்ட வுரையிற்றாம். எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளவற்றுள் யாதானுமொருவகையாற் கேட்போருணர்வு புலன்கொள்ளுமாற்றாலெடுத்துக்கொண்டசூத்திரப்பொருளுரைக்கவென்ப நீண்டுத்துணிபு.

அஃதாமாறு 'வெறிகமழ்......யாப்பே' என்பது நறுநாற்றங்கமழுந்தாமரைமேனடந்தவறிவனை யிறைஞ்சிச் சொல்லுவன் யாப்பென்றவாறு.

இப்பொருளைச் சொல்லுமோவிச்சூத்திரத்துத்தொடர்மொழியெனின், சொல்லும். என்னை: 'வெறி' என்பது நறுநாற்றம் என்றவாறு. 'கமழ்த'லென்பது நாறுதல் என்றவாறு. அது "வெறிகமழ்சந்தனம்", "வெறிகமழ்துழாய்" என்றாற்போலக்கொள்க. 'தாமரை' என்பது தாமரைப்பூவென்றவாறு. இது முதலைக்கூறுஞ் சினையறிகிளவி. "தாமரைபுரையுங்காமர் சேவடி" என்றாற்போலவெனக்கொள்க. 'மீமிசை' என்பது மேன்மேல் என்றவாறு. மீமிசையென்னு மொருபொருட்பன்மொழி சிறப்புப்பற்றி வந்தது. என்னை "ஒரு பொருட்பன்மொழி சிறப்பினின் வழாஅ" என்றாராகலின்; அஃது "அடுக்கன் மீமிசையருப்பம்பேணாது" என்றாற்போலக்கொள்க. 'ஒதுங்கல்' என்பது நடத்தல். அது "போதியங்கிழவனைப்பூமிசை யொதுங்கினை" என்றாற்போலக்கொள்க. எல்லாப்பொருளையு மொருகணத்திற்றானே ஓதாதுணர்ந்தமையின் அறிவனென்பது காரணக்குறி. ஐ என்பது இரண்டாம்வேற்றுமை. 'வணங்கி' என்பது இறைஞ்சியென்றவாறு. வணங்கியெனினும் இறைஞ்சியெனினும் பணிந்தெனினும் ஒக்கும். 'அறைகுவன்' என்பது சொல்லுவன் என்றவாறு. அறைகுவனெனினும் சொல்லுவனெனினும் மொழிகுவனெனினும் ஒக்கும். 'யாப்பு'என்பது யாப்பென்னுமதிகாரம் என்றவாறு. யாப்பெனினும் பாட்டனெனினும் தூக்கெனினும் செய்யுளெனினும் ஒக்கும். ஏகாரம்-தேற்றேகாரம்; பிரிநிலையெனினுமமையும். என்னை: "தேற்றம்வினாவே பிரிநிலையெண்ணே, யீற்றசையிவ்வைந்தேகாரம்மே" என்றாராகலின். "வழிபடுதெய்வவணக்கஞ்செய்து மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்துக்கொண்ட விலக்கணவிலக்கிய மிடுக்கணின்றியினிதுமுடியு" மென்பவாகலினிச்சூத்திர மிவ்வாறு கூறப்பட்டதெனக்கொள்க.

"ஆதியங்கடவுளை யருமறையருகனை
போதியங்கிழவனைப் பூமிசையொதுங்கினை
சேதியஞ்செல்வநின் றிருவடிபரவுதும்"

"காமனைக்கடிந்தனை காலனைக்காய்ந்தனை
தேமலர்மாரியை திருமறுமார்பினை
மாமலர்வண்ண நின்மலரடிவணங்குதும்"

“ஆரருள்பயந்தனை யாழ்துயர்தவிர்த்தனை
ஓரருளாழியை யுலகுடையொருவனைச்
சீரருண்மொழியை நின்திருவடிபரவுதும்.”

எனக்கொள்க.

இனி முப்பத்திருவகை யுக்தியாவன :—முன் கூறியவே. தருக்கமாவன :—ஏகாந்தவாதமும் அனேகாந்தவாதமுமென்பன. அவை குண்டல நீல பிங்கல அஞ்சனம் தத்து மகரிசன காலகேசிமுதலிய செய்யுட்களுள்ளுஞ் சாங்கியவாறுதெரிசனங்களுள்ளுங்காண்க.

இனிச் செய்யுளாவன :—“வரியே குரவை மதிலை வேட, முரியே தாழிசை முன்னிலைவாழ்த்தே, தேவபாணி சிற்றிசை நேரிசை, பாவை நனிநிலை பாங்கமை மடலே” என்றோதப்பட்டன. அவை மணியாரத்துள்ளும் பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க.

இனி இவற்றினுறுப்பு ஐம்பத்துமூன்றாவன :—அல்லியவுறுப்பு ௬ ; கொட்டியுறுப்பு ௧௦; குடையினுறுப்பு ௪; குடத்தினுறுப்பு ௫; பாண்டரங்கவுறுப்பு ௬ ; மல்லாடலுறுப்பு ௫; கண்டத்துறுப்பு ௬ ; பேட்டினுறுப்பு ௪ ; மரக்காலாடலுறுப்பு ௪ ; பாவையுறுப்பு ௩ ; எனவிவை. இவற்றின் றன்மை செயிற்றியமுஞ் சயந்தமும் பொய்கையார்நூலு முதலியவற்றுட்காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும். “முந்துநூன்முடிந்தமுறைமையின் வழாமை, வந்தனபிறவும் வரையறைந்துரைப்போ, னந்தமில்கேள்வியாசிரியன்னே” “மேனூன்முடிந்த முறைமையின்வழாமை, சொன்னவும் சித்திரமைப்பயத்திர சேதக்களிதகத்தவுத்திமுதலிய பிறவுமறிந் திடத்திற்கேற்றவாற்றானுரைக்கவல்லோன் கேள்வி முற்றியவாசிரியனென்று கூறப்படுவா னென்றவாறு.

சொல்லிற் சுருங்கிப் பொருள்பெருகித் தொல்ஞால
மெல்லாம் விளக்கி யிருளகற்று—நல் யாப்
பருங்கலம் வல்லார் தாமன்றே நற்கேள்வி
யொருங்கறிய வல்லா ருணர்ந்து.

யாப்பருங்கலவிருத்தி முற்றும்.

## 4. பிங்கல நிகண்டு.

### காப்பு.

Beginning :

மதியாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான—நதிபா
யிருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ள
முருகவிட்டு நின்ற வொளி.

### சிறப்புப்பாயிரம்.

இருங்கடலுடுத்த விம்மாநிலம்விளங்க
வரும்பொருடெரித்த வகன்றமிழ்வரைப்பி
னியற்சொற்றிரிசொற் றிசைச்சொல்வடசொலென்
றனைத்தேசெய்யுட் கணிகலனுதலிற்
செந்தமிழ்நிலத்து வழக்கொடுசிவணித்
தம்பொருள்வழாம லிசைக்குமியற்சொ
லொருபொருள்குறித்த வேறுசொல்லாகியும்
வேறுபொருள்குறித்த வொருசொல்லாகியு
மிருபாற்றென்ப திரிசொற்கிளவி
செந்தமிழ்சேர்ந்த திசைதிசைதோறுந்
தங்குறிப்பினவே திசைச்சொற்கிளவி
வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ
யெழுத்தொடுபுணர்ந்த சொற்றாகுஞ்
சிதைந்தனவரினு மியைந்தனவரையா
ரந்நாற்சொற்றிற மறிவுறமெனுது
செங்கதிர்வரத்தாற் றிவாகரன்பயந்த
பிங்கலமுனிவ னெனப்பெயர்நிறீஇய
யுரிச்சொற்கிளவி யுரைக்குங்காலை
விருப்புடனிலைஇய வீறுசால்சிறப்பின
வானின்வகையும், வானவர்வகையும்,
வானினுமண்ணினும் வழங்கல்வழாஅ
வீனமிலைய ரியல்புளிவகையு,
மவனிவகையு, மாடவர்வகையு,
மவர்திறத்தமைந்த வனுபோகவகையும்,
வையத்தடைத்த வானுவியல்பிற்
பண்பிற்செயலிற் பகுதியின்வகையும்,
புள்ளின்வகையு, மாப்பெயர்வகையு,

மொருசொல்பலபொரு ளோங்கியவகையுமென்
றிருளறவீரைந்தாக்கி
மருளறவகுத்தனன் மதியினின்விரைந்தே.

பாயிர முற்றும்.

## முதலாவது—வானின்வகைத்தொகுதி.

பொன்னுலகுந்துறக்கமும் புத்தேளுலகும், விண்ணுலகுமேலையுல கும்விசும்பு, நாகமுங்கற்பமும் வானுலகும், வியனுலகுவிதானமு மு வணையுஞ்சுவவும், சுரரிடமுமுயர்நிலையுஞ் சுவர்க்கப்பெயரே.

*　　　*　　　*　　　*

அமரர்சித்தரசுரர்தைத்தியர், கருடர்கின்னரர்கிம்புருடர்காந்தரு வர், இயக்கர்விஞ்சையரிராக்கதர்பூதம், பிசாசந்தாரகைமுனிவருரகர், ஆகாசவாசிகள்போகபூமியரெனப், பாகுபட்டதுபதினெண்கணமே.

முதலாவது வானின்வகைத்தொகுதி முற்றும்.

## இரண்டாவது—வானவர்வகைத்தொகுதி.

ஏகதந்தனிறைமகனேரம்பன், ஆகுவாகனனைந்துகரத்தோன், பார திவிநாயகன் முன்னவன்கரிமுகன், அத்திக்கடவுளரிமருகன்னே, கவு ரிசேயெனக்கணபதிப்பெயரே.

*　　　*　　　*　　　*

பசுவுயிர்சேதனன் புற்கலன்சீவன், அனுவியமானனுன்மாவென்ப.

இரண்டாவது வானவர்வகைத்தொகுதி முற்றும்.

## மூன்றாவது—ஐயர்வகை.

முனிவர்மாதவரிலிங்கியர்முனிவர், படிவருறுவர்பண்ணவனாயந் தா, அறவோர்தாபதரிருடிகளாகும்.

*　　　*　　　*　　　*

மனுவேயத்திரி விண்டுவாசிட்ட, மமியமதமாபத்தம்பமிரேவத, மசுரவவங்கேசவமங்கிராப்பராசரம், வியாதமரிநந்துவசுதங்கவுதமங், கார்த்தீகேயம்பிரகற்பதிசங்கவதமெனப், பாகுபட்டதுபதினெண்டரு மநூல்.

மூன்றாவது ஐயர்வகை முற்றிற்று.

## நான்காவது—அவனிவகை.

அவனிவைய மகலிடங்காசினி, புவனிபுடவி பூதலம்பூமி, புவனம் படர்புவி பொழில்பூநேமி, மேதினிகோத்திரை குவலயங்கோமகி, யுக ம்பார்தராத்திரி தரித்திரிதரணி, தலம்புலங்கிடக்கை தராதலந்தால, மனிலம்பிருதுவிதரை நிலேதிணேஞாலம், அசலேபூவலேய மளக்கர்வசு மதி, வசுந்தரைவசுதை மண்ணுலகென்ப, பூதியம்பராகம் பாரிபொ றையென, ஒதியபிறவு மப்பெயர்க்குரித்தே.

* * * *

சங்கமுமவையுஞ் சமூகமுங்கோட்டியும், என்பவைபலர்தொகுஞ் சவையெனப்படுமே.

நான்காவது அவனிவகை முற்றிற்று.

## ஐந்தாவது—ஆடவர்வகை.

அறவோர்பூசுர ரறுதொழிலாளர், இருபிறப்பாள ரெரிவளர்ப்போ ரே, ஆதிவருணர் வேதியரந்தணர், வேள்வியாளர் மறையவர்விப்பி ரர், மேற்குலத்தோரோ வேதபாரகர், பார்ப்பாருதியரும் பனவருமா மே, மறையோர்தமக்கு வன்னியெனும்பெயர், பிரமசாரியர் பெய்சொ னலாகும்.

* * * *

மூவடிவென்பது பெண்ணுணலியே.

ஐந்தாவது ஆடவர்வகை முற்றும்.

## ஆறுவது—அநுபோகவகை.

அன்னமயினியடிசிலோதனம், பொம்மல்போனக மடையேபுன கம், மூரல்புழுக்கல் மிதவையவியே, சொன்றிபாத்துக் கூழ்பதஞ் சோறே.

* * * *

கரிவேகாயங் கடுகெங்காழ்த்தல்.

ஆறுவது அநுபோகவகை முற்றும்.

## ஏழாவது—பண்பிற்செயலிற்பகுதியின்வகை.

பூணணியணிகலம் பூணடம்வள்ளி.

* * * *

கலவைகலத்தலாகும்.

ஏழாவது பண்பிற்செயலிற்பகுதியின்வகை முற்றும்.

### எட்டாவது—பட்சிவகை [புள்ளின்வகை?.]

அன்னமெகினம் வக்கிராங்கமோதிமம், மென்னடையஞ்ச மராள மும் விளம்புவர்.

* * * *

பிள்ளையும்பறழு மெனவரும்பெயர்கள், தள்ளருஞ்சிறப்பிற்றவழ் வனபெறுமே.

எட்டாவது பட்சிவகை முற்றும்.

### ஒன்பதாவது—மரப்பெயர்வகை.

சந்தானங்கற்பக தாருவுடனே, பாரிசாதம் பகர்மந்தாரமும், தேவ தாரமுந் தெய்வமரமே.

* * * *

அமுதமமிழ்துஞ் சீவனியுமென்ன, வுயிர்தருமருந்தி னுறுபெய ராகும், அதகமென்பது மப்பெயர்க்குரித்தே.

ஒன்பதாவது மரப்பெயர்வகை முற்றும்.

End:

### பத்தாவது ஒருசொற்பலபொருட்பெயர்த்தொகுதி [வகை].

துங்கமலையு நிலையுந்தாணுவுஞ், சங்கரன்பெயரும் தாணுவாகும்.

* * * *

மலருந்தளிரு மஞ்சரியென்ப.

பத்தாவது ஒருசொற்பலபொருட்பெயர்த்தொகுதி முற்றும்.

பிங்கலநிகண்டு முற்றிற்று.

---

## 5. சிலப்பதிகாரம்.

### பதிகம்.

Beginning:

குணவாயிற் கோட்டத் தரசுதுறந்திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்குக்
குன்றக் குறவ ரொருங்குடன் கூடிப்
பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழ
லொருமுலை யிழந்தாளோர் திருமா பத்தினிக்
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்

காதற் கொழுநனைக் காட்டி யவளொடெங்
கட்புலங் காண விட்புலம் போய
இறும்பூது போலுமஃ தறிந்தரு ளீயென
வவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்
யானறி குவனது பட்டதென் றுரைப்போ
னாரங் கண்ணிச் சோழன் மூதூர்ப்
பேராச் சிறப்பிற் புகார்நக ரத்துக்
கோவல னென்பானோர் வாணிக னவ்வூர்
நாடக மேத்து நாடகக் கணிகையோ
டாடிய கொள்கையி னரும்பொருள் கேடுறக்
கண்ணகி யென்பாண் மனைவி யவள்காற்
பண்ணமை சிலம்பு பகர்தல் வேண்டிப்
பாடல்சால் சிறப்பிற் பாண்டியன் பெருஞ்சீர்
மாட மதுரை புகுந்தன னதுகொண்டு
மன்பெரும் பீடிகை மறுகிற் செல்வோன்
பொன்செய் கொல்லன் றன்கைக் காட்டக்
கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்
பியாப்புற வில்லையீங் கிருக்கென் றேகிப்
பண்டுதான் கொண்ட சில்லரிச் சிலம்பினைக்
கண்டனன் பிறனோர் கள்வன் கையென
வினைவிளை கால மாதலின் யாவதுஞ்
சினையலர் வேம்பன் றேரா னாகிக்
கன்றிய காவலர்க் கூஉய்க் கள்வனைக்
கொன்றச் சிலம்பு கொணர்க வீங்கெனக்
கொலைக்களம் பட்ட கோவலன் மனைவி
நிலைக்களங் காணா ணெடுங்கணீ ருகுத்துப்
பத்தினி யாகலிற் பாண்டியன் கேடுற
முத்தார மார்பின் முலைமுகந் திருகி
நிலைகிளர் கூட னீளெரி யூட்டிய
பலர்புகழ் பத்தினி யாகு மிவளென ;
வினைவிளை கால மென்றீர் யாதவர்
வினைவிளை வென்ன விறலோய் கேட்டி
யதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க்
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்
வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தே
னாரஞ ருற்ற வீரபத் தினிமுன்
மதுரைமா தெய்வம் வந்து தோன்றிக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்தோய்

முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவனொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்துச்
சங்கம னென்னும் வாணிகன் மனைவி
யிட்ட சாபங் கட்டிய தாகலின்
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி னல்லதை
யீனோர் வடிவிற் காண்ட லில்லெனக்
கோட்டமில் கட்டுரை கேட்டனன் யானென
வரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉ
முரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலு
மூழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉஞ்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதிகார மென்னும் பெயரா
னாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென
முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரிய
தடிக ணீரே யருளுகென் றாற்கவர்
மங்கல வாழ்த்துப் பாடலுங் குரவர்
மனையறம் படுத்த காதையு நடனவின்
மங்கை மாதவி யரங்கேற்று காதையு
மந்தி மாலைச் சிறப்புச்செய் காதையு
மிந்திர விழவூ ரெடுத்த காதையுங்
கடலாடு காதையும், மடலவிழ்
கானல் வரியும் வேனில்வந் திறுத்தென
மாதவி யிரங்கிய காதையுந் தீதுடைக்
கனாத்திற முரைத்த காதையும் வினாத்திறத்து
நாடுகாண் காதையுங் காடுகாண் காதையும்
வேட்டுவ வரியுந் தோட்டலர் கோதையொடு
புறஞ்சேரி யிறுத்த காதையுங் கறங்கிசை
யூர்காண் காதையுஞ் சீர்சானங்கை
யடைக்கலக் காதையுங் கொலைக்களக் காதையு
மாய்ச்சியர் குரவையுந் தீத்திறங் கேட்ட
துன்ப மாலையு நண்பக னடுங்கிய
ஊர்சூழ் வரியுஞ் சீர்சால் வேந்தனொடு
வழக்குரை காதையும் வஞ்சின மாலையு
மழற்படு காதையு மருந்தெய்வந் தோன்றிக்
கட்டுரை காதையு மட்டலர் கோதையர்

குன்றக் குரவையு மென்றிவை யனைத்துடன்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்
வாழ்த்து வரந்தரு காதையொ
டிவ்வாறைந்து
முரையிடையிட்ட பாட்டுடைச் செய்யு
ளுரைசா லடிக ளருள மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன், இது
பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென.

* * * *

அன்றுதொட்டுப்பாண்டியனாடு மழைவறங்கூர்ந்து வறுமையெய்தி வெப்புநோயுங் குருவுந்தொடரக் கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப்பொற்கொல்லராயிரவரைக்கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந்துன்பமுநீங்கியது.

அதுகேட்டுக் கொங்கிளங்கோசர் தங்கணாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்திசெய்ய மழைதொழிலென்றும் மாறாதாயிற்று.

அதுகேட்டுக் கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான் நங்கைக்கு நாட்பலிபீடிகை கோட்டமுந்துறுத்தாங்கு அரந்தைகெடுத்து வரந்தருமிவளென ஆடித்திங்களகவையினாங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறையெடுப்ப மழைவீற்றிருந்து வளம்பலபெருகிப் பிழையாவிளையுளுண்டாயிற்று.

அதுகேட்டுச் சோழன் பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத்தானும் வரந்தருமிவளோர் பத்தினிக்கடவுளாகுமென நங்கைக்குப்பத்தினிக் கோட்டமுஞ்சமைத்து நித்தல்விழாவணி நிகழ்வித்தோனே.

## க.—புகார்காண்டம்.

திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்தார்ச் சென்னிகுளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்
ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்
மாமழை போற்றுது மாமழை போற்றுது
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோன்
மேனின்று தான்சுரத்த லான்
பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ
டோங்கிப் பரந்தொழுக லான்
ஆங்கு,

பொதியி லாயினு மிமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினு
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
யொடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே
அதனால்,
நாகநீ ணகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னில்
மாகவா னிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்ப
ரீகைவான் கொடியன்னா ளீராறாண் டகவையாள்
அவளுந்தான்,
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றுந்
தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்று
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென்பாண்மன்னோ
ஆங்கு,
பெருநில முழுதாளும் பெருமகன் றலைவைத்த
வொருதனிக்குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பா
னிருநிதிக் கிழவன்மக னீரொட்டாண் டகவையான்
அவனுந்தான்,
மண்டேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்டேய்த்த மொழியினா ராயத்துப் பாராட்டிக்
கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலனென் பான்மன்னோ
அவரை,
இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி
யானையெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்.
அவ்வழி,

முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தனபணிலம்வெண்குடை
யரசெழுந்ததொர் படியெழுந்தன வகலுண்மங்கல வணியெழுந்தது.

மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணத்து
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்

மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனிய
ருரையினர் பாட்டின ரொசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதைய
ரேந்திள முலையின ரிடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தற் பொலனறுங் கொடியனார்
காதலற் பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமற்
றீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி
யங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார் தங்கிய
விப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை
யுப்பாலைப் பொற்கோட் டுழையதா வெப்பாலுஞ்
செருமிகு சின்வேற் செம்பிய
ஞொருதனி யாழி யுருட்டுவோ னெனவே.

* * *

முடியுடை வேந்தர் மூவ ருள்ளுந்
தொடிவிளங்கு தடக்கைச் சோழர்குலத் துதித்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தந்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும்
பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலு
மரங்கு மாடலுந் தூக்கும் வரியும்
பரந்திசை யெய்திய பாரதி விருத்தியுந்
திணைநிலை வரியு மிணைநிலை வரியு
மணைவுறக் கிடந்த யாழின் றொகுதியு
மீரேழ் சகோடமு மிடநிலைப் பாலையுந்
தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணு
மூரகத் தேரு மொளியுடைப் பாணியு
மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் தனிக்கோ ணிலைமையு
மொரு பரிசா நோக்கிக் கிடந்த
புகார்காண்டம் முற்றிற்று.

காலையரும்பி மலருங் கதிரவனு
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
யகழா லமைந்த வவனிக்கு மாலைப்
புகழா லமைந்த புகார்.

## உ.—மதுரைக்காண்டம்.

திங்கண் மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதைதாழ் பிண்டிக் கொழுநிழ லிருந்த
வாதியி றேற்றத் தறிவனை வணங்கிக்
கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லா
மந்தி லரங்கத் தகன்பொழி லகவயிற்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
மாதவத் தாட்டியு மாண்புற மொழிந்தாங்
கன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கித்
தென்றிசை மருங்கிற் செலவுவிருப் புற்று
வைகறை யாமத்து வாரணங் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற
வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்த
விளமரக் கானத் திருக்கை புக்குழி
வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதொ றூழிதொ றுலகங் காக்க
வடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி

* * * *

* * * *

கடிபொழி லுடுத்த கலிங்கநன் னாட்டு
வடிவேற் றடக்கை வசுவுங் குமரனுந்
தீம்புனற் பழனச் சிங்க புரத்தினுங்
காம்பெழு கானக் கபில புரத்தினு

மரசாள் செல்வத்து நிரைதார் வேந்தர்
வீயாத் திருவின் விழுக்குடிப் பிறந்த
தாயர் வேந்தர் தம்முட் பகையுற
விருமுக் காவதத் திடநிலத் தியாங்கணுஞ்
செருவெல் வென்றியிற் செல்வோ ரின்மையி
னரும்பொருள் வேட்கையிற் பெருங்கலன் சுமந்து
கரந்துறை மாக்களிற் காதலி தன்னொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தினொ
ரங்கா டிப்பட் டருங்கலன் பகருஞ்
சங்கம னென்னும் வாணிகன் றன்னை
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவன்
வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன்
பரத னென்னும் பெயரனக் கோவலன்
விரத நீங்கிய வெறுப்பின னாதலி
னொற்ற னிவனெனப் பற்றினன் கொண்டு
வெற்றிவேன் மன்னற்குக் காட்டிக் கொல்வுழீஇக்
கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி
நிலைக்களங் காணா ணீலி யென்போ
ளரசர் முறையோ பரதர் முறையோ
ஊரீர் முறையோ சேரியீர் முறையோவென
மன்றினு மறுகினுஞ் சென்றனள் பூசலிட்
டெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்தி
மலைத்தலை யேறியோர் மால்விசும் பேணியிற்
கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோ
ளெம்முறு துயரஞ் செய்தோரி யாவதுந்
தம்முறு துயரமிற் றாகுக வென்றே
விழுவோ ளிட்ட வழுவில் சாபம்
பட்டனி ராதலிற் கட்டுரை கேணீ
யும்மை வினைவந் துருத்த காலைச்
செம்மையி லோர்க்குச் செய்தவ முதவாது
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி னல்ல
தீனோர் வடிவிற் காண்ட லில்லென
மதுரைமா தெய்வ மாபத் தினிக்கு
விதிமுறை சொல்லி யழல்வீடு கொண்டபின்
கருத்துறு கணவற் கண்டபி னல்ல

இருத்தலு மில்லை யிற்றலு மிலனெனக்
கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்துக்
கீழ்த்திசை வாயிற் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கென
விரவும் பகலு மயங்கினள் கையற்
றுரவுநீர் வையை யொருகரைக் கொண்டாங்
கவல வென்னு ளவலித் திழிதலின்
மிசைய வென்னுண் மிசைவைத் தேறலிற்
கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு பிளந்தாங்
கவுணரைக் கடந்த சுடரிலை நெடுவே
னெடுவேள் குன்ற மடிவைத் தேறிப்
பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழோர்
தீத்தொழி லாட்டியேன் யானென் றேங்கி
யெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்திப்
பீடுகெழு நங்கை பெரும்பெய ரேத்தி
வாடா மாமலர் மாரி பெய்தாங்
கமரர்க் கரசன் றமர்வந் தேத்தக்
கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு
வானவூர்தி யேறினண் மாதோ
கானமர் புரிகுழற் கண்ணகி தானென.

---

தெய்வந் தொழாஅள் கொழுநற்—றொழுவாளைத்
தெயவந் தொழுந்தகைமை திண்ணமால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து.

---

முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தம்
வையைப் பேரியாறு வளஞ்சுரந் தூட்டலும்

பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலு
மாரபடி சாத்துவதி யென்றிரு விருத்தியு
நேரத் தோன்றும் வரியுங் குரவையு
மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் தனிக்கோ ணிலைமையும்
வட வாரியர் படைகடந்து
தென்றமிழ்நா டொருங்குகாணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
னரசு கட்டிலிற் றுஞ்சிய பாண்டிய
னெடுஞ்செழியனோ டொரு பரிசா
நோக்கிக் கிடந்த
மதுரைக்காண்ட முற்றிற்று.

Incomplete.

---

## 6. சிலப்பதிகாரம்—அரும்பதவுரை.

Beginning:

குணவாயிற்கோட்டம் - திருக்குணவாயிற்கோயில். சேரலென்பது-செங்குட்டுவனை. சேரனுக்கிளங்கோவாகியவடிகளை இளங்கோவடிகடாந்துறந் திருந்திக்காவியஞ் செய்தார். கொழு நிழற்கணின்று காட்டக் கண்ணென்கின்ற புலங்காண. விட்புலம்-விண்ணென்கின்ற விடம் - அதுபட்டது. பேராச்சிறப்பு - நீங்காதபெருமை. நாடகமேத்து நாடகக்கணிகை - நாடகத்தையாடிச் சிறப்பிக்குங்கணிகை. ஆடிய கொள்கையின் - ஆடியகோட்பாட்டால். புகுந்தனளாய். பீடிகை - வணிகர் தெரு. யாப்புறவில்லை - பொருத்தமில்லை. பண்டுதான்கொண்ட - முன்புதான்களவிற்கொண்ட. பிறனோர்கள்வன். கன்றிய காவலர் - காவலிற்றழும்பியவர். நிலைக்களம் - நிலையிடம். நெடுங்கண்ணனைது நீருகநிற்ப. பத்தினியாதலில் - ஆக்கலுமழித்தலும் வல்லளாதலில். முலைமுகம் - முலையிடம். பலர்புகழ் பத்தினியாகுமென்று சாத்தன் சொல்ல. அதிராச்சிறப்பு - பகைவரால திர்ச்சியில்லாத சிறப்பு. கொன்றையஞ்சடை - ஆகுபெயர். மன்றப்பொதியில் - மன்றத்தின் கட்பொதியிலாகிய வெள்ளியம்பலம். வீரபத்தினி - சீரிய கற்புடையாள். பைந்தொடி - முன்னிலைப்பெயர். சிங்காமை - சுருங்காமை. கணவனோடுகொட்டியதென்க. கூந்தல் - கூந்நால். ஈனோர் - இவ்வுலகத்தின்மக்கள். காண்டலில்லென. உரைசால் பத்தினிக்கு - புகழமைந்த பத்தினியை. முறைமையாகிய பழவினை வழிபட்டுவந்தது.

சூழ்வினை-சூழ்ந்த சிற்பத்தொழில். பாட்டுடைச்செய்யுள் - உருவாகி
ய பாட்டுக்களையுடையகாவியம். முடிகெழுவேந்தர் மூவர்க்குமுரியது -
புகாரினு மதுரையினும்வஞ்சியினு நிகழ்தலான் மூவர்க்குமுரியது.
அடிகளென்றது-இளங்கோவடிகளை. என்றுளுக-என்றுசொன்னுளுக.
மங்கலவாழ்த்து - கலியாணவாழ்த்து. மடல் - பூ. வினைத்திறத்து -
கவுந்தியடிகள்வினவிய திறத்தையுடைய. தோடலர் நண்பகனடுங்கி
ய-கண்ணகி நண்பகற்கண்ணே நடுங்கிய. கட்டுரை. - விளங்கச் சொல்
லுதல். மட்டலர்கோதையர் குன்றக்குரவை-குறத்தியராடிய குரவை
பாட்டுமுரையுங் கலந்துவந்தகாவியம். வஞ்சிமூதூர் மணிமண்ட பத்
திடைத் தந்தையோடிருந்துழி யரசுவீற்றிருக்குந் திருப்பொறி யுண்
டென்றோர் நிமித்திகன்சொல்ல முன்னோனுகி யரசுவீற்றிருக்கும் செ
ங்குட்டவனிருப்பவிவ்வாறு முறைபிறழக்கூறியது பொருதுகுணவாயி
ற்கோட்டத்துக் கடவுளர்முன்னர்த்துமந் திருந்தவிளங்கோவடிகளு
க்குக் கண்ணகி வானவர்போற்றத்தன்கணவனோடு கூடியதுகண்டு செ
ங்குட்டுவனுக் குரைத்தகுறவர் வந்தெல்லாமறிந்தோ யிதனையறிந்தரு
ளென்று கூறிப்போகப் பின்பு செங்குட்டுவனைக்கண்டு போந்தடிகளுட
ன் வந்த சாத்த னது பட்டவாறெல்லாங் கூற வதுகேட்டவடிகளரசிய
ல் பிழைத்தோர்க் கறங்கூற்றென்பதூஉம் பத்தினிமகளிர் பெய்யெனப்
பெய்யுமழை யென்பதூஉம் மூழ்வினையுருத்து வந்தூட்டுமென்பதூ உமி
க்கதை யகத்துண்மையினதனை யாமொருசெய்யுளாகச் செய்வோமெ
ன்று இளங்கோவடிகள்கூற மூவேந்தர் நாட்டினு நிகழ்ந்த கதையாக
லா னேனையிருவேந்தரியல்பு வேத்தியலும் பொதுவியலு மெல்லாமு
ணர்ந்த நீரேயருளவேண்டுமென்று சாத்தன் சொல்ல விம்முப்பது
வகைத்தாகிய செய்யுளை யிளங்கோவடிகளருள க்கூலவாணிகன் சாத்
தன் கேட்டான் என்க. பதிகமுற்றும். கொங்கிளங்கோசர் - குறு
ம்பு செலுத்துவார் சிலவீரர். நாட்பலிபீடிகை நித்தலும் பலியிடுமிட
த்தையுடைய கோட்டம். அரந்தை - துக்கம். பிறையாவிளையுள் -
குன்றாவிளையுள். எத்திறத்தானும் - வேண்டினர் வேண்டியவாறெல்
லாம். நித்தல் விழாவணி - நித்தியமாகிய வணிவிழா. உரைபெறு
கட்டுரை - உரைத்துப்போதுகின்ற கட்டுரை.

* * * *

**End :**

ஆடுஉக்குணம்-அறிவு நிறை....................ப்புக்கடைப்பிடி. அறி
வாவது - பலநூல்களையுங் கற்றறியப்படுவது - நிறையாவது - காப்பன
காத்துக்கடிவன கடிந்தொழுகுகல். ஓர்ப்பாவது ஐயப்பட்டபொருண்...
...............பொருளெனத்துணிந்தறிதல். கடைப்பிடியாவது - கற்றுங்
கேட்டுமுள்ள பொருளை மறவாமை. கற்றலுங்கேட்டலும். கடூஉநாற்

குணம் நாணமடமச்சம்பயிர்ப்பு. நாணமாவது - பெண்டிர்க்கியல்பாகிய குணம். மடமாவது - கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை. அச்சமாவது-கணவர்காணாத பொருளைக்கண்டாலஞ்சுவது. பயிர்ப்பாவது - பயிலாதபொருட்கணருவருத்து நிற்கு நிலைமை.

சிலப்பதிகார அரும்பதவுரை முற்றிற்று.

---

## 8. கார்நாற்பது.

Beginning :-

1. பொருகடல்வண்ணன் புனைமார்பிற்றார்போற்
றிருவில்விலங்கூன்றித் தீம்பெயறாம்வீழ
வருதுமெனமொழிந்தார் வாராா்கொல்வானங்
கருவிருந்தாலிக்கும்பொழுது.

எ-து [தோழிதலைமகட்குப் பருவங்காட்டிவற்புறீஇயது] பொருகடலினது நிறம்போன்ற நிறத்தினையுடையான் புனைந்தமார்பிற் பூமாலைபோல விந்திரவில்விலங்காகவூன்றி யினிய பெயல்விழாநிற்கவருவே மென்றுசொல்லினார்வாராரோ? மழைகருக்கொண்டிருந்து துளிகளைவிடாநின்றதாதலான். (எ-று).

2. கடுங்கதிர்நல்கூரக் கார்செல்வமெய்த
நெடுங்காடு நேர்சினையீனக்—கொடுங்குழை
யின்னேவருவர் நமரென்றெழில்வான
மின்னுமவர்தூதுரைத்து.

எ-து [இதுவுமது] பகலோனுடைய கடுங்கதிர்கள்வறுமையுறக், கார்காலஞ்செல்வமுற, நெடியகாடெல்லாமிகப்பயன்றரக், கொழுங்குழையையுடையாய்! நமரிப்பொழுதே வருவரென்று எழிலையுடையமுகின்மின்னாநின்றதவர்தூதாயறிவித்து. (எ-று).

3. வரிநிறப்பாதிரி வாடவளிபோழ்ந்த
யிரமணற்றண்புறவினுலி—புரள
வுருமிடிவானமிழியவெழுமே
நெருநலொருத்திதிறத்து·

எ-து [பருவங்கண்டழிந் ததலைமகளாற்றல்வேண்டிதோழி தனதாற்றாமைதோன்ற வுரைத்தது] வரிநிறத்தையுடைய பாதிரிப் பூவாடும்வகை காற்றானடறுக்கப்பட்டு இளமணலையுடைய தண்புறவின்கண்ணலங்கட்டிபுரளவுருமிடிக்கு முகிலிழிதராநின்றதெழாநின்றது நெருநற்றையலாளொருத்திமாட்டு வருந்துவான்வேண்டி. எ-று. [அல்லதூஉம் நெருநற்றொடங்கித் தனியாண்மாட்டென்றுமாம்.]

4. ஆடுமகளிரென மஞ்ஞையணிகொள்ள
காடுங்கடுக்கை கவின்பெறப்பூத்தன
பாடுவண்டூதும் பருவம்பணைத்தோளி
வாடும்பசலை மருந்து.

எ-து [பருவங்காட்டித் தலைமகளை வற்புறுத்தியது] கூத்தாடுமகளி ரேபோல மயில்களழகுபெறக், காடுகளுங்கொன்றைகளா னழகுபெற ப்பூத்தன, அப்பூக்களைப் பாடுவண்டுகளு மூதாநின்றன; ஆதலால், பணைத்தோளி வாடும் பசலைக்குமருந்திப்பருவம். (எ-று.)

5. இகழுநர்ச்சொல்லஞ்சிச் சென்றார்வருதல்
பகழிபோலுண்கண்ணாய் பொய்யன்மையீண்டைப்
பவழஞ்சிதறியவைபோலக்கோபம்
தவழுந்தகையபுறவு.

எ-து [இதுவுமது] இகழ்வார்சொல்லஞ்சிப்பொருட்குச்சென்றார் வருதலம்புபோன்றவுண்கண்ணாய் பொய்யன்மையாம். இவ்விடத்து ச் சிதறியபவழம்போலக் கோபங்கள்பறக்குந் தகைமையையுடையவா யினகாடுகளாதலின், (எ-று.)

End :

40. வந்தனஞ்செய்குறி வாராரவரென்று
நொந்தவொருத்திக்கு நோய்தீர்மருந்தாகி
யிந்தின்கனிவண்ணங்கொண்டன்றெழில்வான
நந்துமென்பேதைநுதல்.

எ-து [பருவங்காட்டித் தலைமகளைத்தோழிவற்புறுத்தியது] அவர் செயகுறிகளறுந்தன, அவர்வருகிலரென்று தேர்ந்தவொருத்தியாகிய நினக்குநோய் தீர்க்குமருந்தாகி யீந்தின்கனியினிறம்போலக் கருதிற த்தைக்கொண்ட தெழில்வான், மெல்லியபேதாய் நின்னுடையநுதலி னி யொளிபெறநந்தும், (எ-று) [ஈந்தென்பதனை இந்தென்று குறுக்கி யது.]

மதுரைக் கண்ணங்கூத்தனார்செய்த
கார்நாற்பது முற்றிற்று.

---

## 9. திணைமாலை நூற்றைம்பது.

### குறிஞ்சி.

Beginning :

1. நறைபடர்சாந்த மறவெறிந்துநாளா
லுறையெதிர்ந்து வித்தியவூழென்ற—பிறையெதிர்ந்த
தாமரைபோய்வாண்முகத்துத் தாழ்குழலீர்காணீரோ
வேமரைபோந்தனவீண்டு.

எ-து.—[தலைமகளுந் தோழியு மொருங்கிருந்தவழிச்சென்று தலைமகன் றேழியைமதியுடம்படுத்தது]—நறைக்கொடி படர்ந் துயர்ந்த சந்தனங்களையறவெட்டி நல்லநாளான் மழைபெய்யுங்காலத்தை யேற்றுக்கொண்டு வித்திமுதிர்ந்த வேனலின்கட்பிறையையேற்றுக்கொண்டதொரு தாமரை மலரைப்போலும் வாண்முகத்தையுந் தாழ்ந்தகுழலினையு முடையீர்கண்டிலீரோயேவுண்டமரைபோந்தனவவற்றையிவ்விடத்து. (எ-று.)

2. சுள்ளிசுனைநீலஞ்சோபாலிகைசெயலை
யள்ளியளகத்தின்மேலாய்ந்து—தெள்ளி
யிதனாற்கடியொடுங் காவீர்கடாயானை
யுதனாற்கடிந்தானுளன்.

எ-து.—[தோழி செவிலிக்கறத்தொடு நின்றது]—நறவமலரையுஞ் சுனைநீலமலரையும் அடப்பமலரையும் அசோகமலரையுங் கொய்து முகந்து நின்மகள் குழலின்மேலேயாராய்ந்து புனைவதுஞ்செய்து பின்றொருநாட்டுணிந்து பறனாற் காவலமையாத வீர்ங்கடாயானையை மீட்டம்பாற்கடிந்து காத்துமிப்பெற்றி யுதவிசெய்தானொருவனுளன். (எ-று.)

3. சாந்தமெறிந்துழுத சாரற்சிறுதினைச்
சாந்தமெறிந்தவிதண்மிசைச்—சாந்தங்
கமழக்கிளிகடியுங் கார்மயிலன்னா
ளமழக்கிளியெழுவார்த்து.

எ-து.—[பகற்குறிக்கண்வந்த தலைமகனைக்கண்டு தோழி செறிப்பறிவுறீஇயது]—சந்தனங்களை வெட்டியுழுத சாரலின்கண் வித்தியவேனலின்கட் படிந்த கிளிகளைச் சந்தனங்களைக் காலாகவெறிந்து செய்த பறண்மிசை யிருந்துபூசிய சாந்தமெங்கும்பரந்து கமழவுலாவிக்கடிகின்ற கார்மயிலன்னாடன் வாய்திறந்தாயோ வென்றியபுதலாற்றம்மினமென்று கிளிகளார்த்துப்போக. (எ-று.)

4. கோடாப்புகழ்மாறன் கூடலனையாளை
யாடாவடகினுளுங் காணேன்போர்—வாடாக்
கருங்கொல்வேன்மன்னர் கலம்புக்ககொல்லோ
மருங்குல்கொம்பன்னாள்மயிர்.

எ-து [தலைமகளிற்செறிந்தகாலத்துப் புனத்தின்கண் வந்த தலைமகன் றலைமகளைக்காணாதாற்றாதுபெயர்கின்றான்சொல்லியது]—கோடாதபுகழையுடைய மாறன்மதுரையனையாளை யாடாத பண்ணையுளுங்காண்கின்றிலேன், போரின்கண் வாடாத கருங் கொற்றொழிலை யுடைய வேல்மன்னரணிகலனாகிய முடிகூடினகொல்லோ விடையாற்கொம்பையனையாள் மயிர்கள். (எ-று).—ஆடாவடகென்று விளையாட்டிற்குவெளி

ப்படை. நிலையென்னு மலங்காரத்தாற் பெயராயிற்று. அடாவென்பதனை ஆடாவென்றுநீட்டியது. மன்னர்கலமென்பது மன்னரணியுமணிமுடியாதலான முடியின்பெயராற் கூந்தற்குச்சேர்த்திகூடிற்றுக் கொல்லோவென்றதாகக்கொள்க.

5. வினைவிளையச்செல்வம் விளைவதுபோல்வீடாப்
பனையளவுநாமெண்ணிப் பாத்தித்—தனைவிழைய
மையார்தடங்கண் மடநல்லாய்தீத்தீண்டு
கையார்பிரிவித்தல்காண்.

எ-து—[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச்சொல்லுவாளாய்த் தோழி செறிப்பறிவுறீயது]—கெடாதபனையென்னு மளவுபோன்றவளவினையுடைய வின்பவளவினை நாமெண்ணி யிருப்பவதற்கிடையூறாக நல்வினைவிளையச் செல்வம் விளைவதுபோலப் பாத்தியின்கட் டினை விளைதலான் மையார் தடங்கண் மயிலன்னாய் தினைகொய்ய நாட்சொல்லி வேங்கையார் நம்மை யிங்குநின்றும் பிரிவித்தலைப்பாராய். (எ-து).

End:

153. துனிபுலவி யூடலினேக்கென்றுடர்ந்த
கனிகலவி காதலினுங்காணேன்—முனிவகலி
னுனநடுக்கு நளிவயலூரனைக்
காணுவெப்போதுமோகண்.

154. முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண்முத்துக்
கனிந்தார் களவியல் கொள்கைக்—கனிந்தா
ரிணைமாலை யீடிலா வின்றமிழாயாத்த
திணைமாலை கைவரத்தேர்ந்து.

**மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் அருளிய திணைமாலைநூற்றைம்பது முற்றும்.**

---

## 10. திணைமொழி ஐம்பது.

குறிஞ்சி.

Beginning:

1. * * * * * *

2. * * * * * *

3. கணமுகைகையெனக் காந்தள்கவின
மணமுகையெண்ணி மந்திகொண்டாடும்
விறன்மலைநாட வரவரிதாங்கொல்லோ
புனமுமடங்கினகாப்பு.

எ-து—[செறிப்பறிவுறீஇவரைவுகடாயது] — திரட்சியை யுடைய மொட்டுகளைக் கையென்று கருதும்படி காந்தள்களழகுபெறவரும்பவ தன்மணத்தையுடைய முகைகளென்று கருதி மந்திகள்கொண்டாடுகின்ற மிகுதியையுடையமலைநாடனே ! நீயிங்குவருதலரிதாங் கொல்லோ புனங்களுந்தினையரியப்பட்டுக் காவலொழிந்தன. (எ-று).

4. ஓங்கலிறுவரை மேற்காந்தள்கடிகவெனப்
பாம்பெனவோடியுருமிடிப் பக்கண்டிரங்கும்
பூங்குன்றநாடன் புணர்ந்தவந்நாள்போலா
வீங்குநெகிழ்ந்தவளை.

எ-து.—[தலைமகன் சிறைப்புறத்தானாகத்தலைமகட்குச்சொல்லுவாளாய்த் தோழிசொல்லியது]—தலையினது பக்கமலைமேற் காந்தள் புதிதாகவழகுபெறுதலாலவற்றின் முகைகளைப் பாம்பென்று கருதிச்சென்றுரு மிடித்தலானவற்றைப் பிறர்கண்டிரங்குகின்ற பூங்குன்றநாடன் புணர்ந்தவந்நாள்போலவாயிக்காலத்து நெகிழ்ந்து கழன்றவெள்வளைகள். (எ-று).

5. ஏனலிடத்திட்ட வீர்மணிகொண்டெல்லிடைக்
கானவர்மக்கள் கனலெனக்கைகாய்த்தும்
வானுயர்வெற்பன் வருவான்கொலென்றோழி
மேனிபசப்புக்கெட.

எ-து.—[தலைமகளைத் தோழியிரவுக்குறி நயப்பித்தது]—ஏனலிடத்திட்ட குளிர்ந்தமணிகளைக்கொண்டிரவின்கட் குறவர்மக்கள் தங்குளிர் நீங்கநெரா...வெற்பனிங்குவருவான் கொல்லோ வென்னுடையதோழி மேனியிற்பசப்புக்கெட. (எ-று).

End :

49. மயில்கொன்மடவாள்கொன்மாநீர்த்திரையுட்
பயில்வதோர்தெய்வங் கொல்கேளீர்—குயில்பயிலுங்
கன்னியிளஞாழற் பூம்பொழிநோக்கிய
கண்ணின்வருந்து மென்னெஞ்சு.

எ-து—[தலைமகன்பாங்கற்குச்சொல்லியது]—மயிலோமடவாளோ மாநீர்த்திரையின்கடல்பயின்றுறைவதோர் தெய்வங்கொல்கேளீரோ ! குயில்கள்கூவாநின்ற கன்னியிளஞாழற்பூம் பொழிலின்கண் அவளை நோக்கியவென்கண்ணினு மிகவருந்தாநின்ற தென்னெஞ்சு. (எ-று).

50. பவழமுமுத்தும் பளிங்கும்விரைஇப்
புகழக்கொணர்ந்து புறவடுக்குமுன்றிற்
றவழ்திரைச்சேர்ப்பன் வருவான்கொரேழி
திகழுந்திருவமர்மார்பு.

எ-து—[பகற்குறிக்கட்டலைமகன் சிறைப்புறத்கானாகத்தலைமகட்குச் சொல்லுவாளாய்த தோழிவரவுகடாயது]—பவழத்தினையும் முத்தினையும் பளிங்கினையுங்கலந்து பிறர்புகழக்கொண்டுவந்து மனைசூழ்ந்தபடப்பையையணைந்த முற்றத்தின்கண் வந்து வழங்குகின்ற திரையையுடைய சேர்ப்பன்விரைந்துவருவான் கொல்லோ தோழிமுன்புபோற் பொலிவழிந்திரா, தினதழகமைந்தமார்பு, பொலிவுடைத்தா யிருந்ததாதலானெம்பெருமான் விரைந்து வருமென்றுமுற்கொண்டுமெக்கறிவிக்கின்றதுபோலும். (எ-று).

சாத்தந்தையனுர்மகனுர் கண்ணன்சேந்தனுர்செய்த

திணைமொழி ஐம்பது முற்றும்.

---

## 11. இன்னு நாற்பது.

Beginning :

முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னு
பொற்பன வெள்ளியை யுள்ளா தொழுகின்னு
சக்கரத் தானை மறப்பின்னு தாங்கின்னு
சத்தியான் றொழா தார்க்கு.

என்பது—முக்கண்ணினையுடைய பகவனடிதொழாதார்க் கின்னுவாம்; பொற்பனக்கொடியையுடைய வெள்ளியோனை நினையாதொழுகுதலின்னுவாம்; சக்கரப்படையையுடையானை மறத்தலின்னுதாம்; அவைபோல,—வேற்படையையுடைய முருகன்றொழாதார்க் கின்னுவாம்—என்றவாறு.

End ;

கொடுக்கும் பொருளிலான் வள்ளன்மை யின்னு
கடித்தமைந்த பாக்கினுட் கற்படுத லின்னு
கொடுத்து விடாமை கவிக்கின்னு வின்னு
மடுத்துழிப் பாடா விடல்.

எ - து—பிறர்க்குக்கொடுக்கும் பொருளில்லாதான்கொடைபூணுதலின்னுவாம்; பிளந்தமைந்தபாக்கின்கட் கற்படுதலின்னுவாம்; கொடையமையக் கொடுத்துவிடாதொழிதல் கவிசெய்வானது கவிக்கின்னுவாம்; கொண்டதானத்துக்காகப் பாடாதொழிதலின்னுவாம். எ-று.

அடக்க முடையவன் மீளிமை யின்னு
தடக்க மிலாதவன் றற்செருக் கின்னு
வடைக்கலம் வவ்வுத லின்னுவாங் கின்னு
வடக்க வடங்காதார் சொல்.

எ - து—ஐம்பொறிகளை யடக்கியவொருவன் சொல்வலியின்னுவாம்; துணிந்து தடங்கி யொன்றைச்செய்யமாட்டாதவன் தன்னைமதித்த லின்னுவாம் ; ஒருவனடைக்கலம் வைத்தபொருளைக்கொடா தொழித லின்னுவாம்; அவைபோல,—இன்னு வாங் கற்பினைக்கொள்ளாதார்க்குச்சொல்லுஞ்சொல். எ-று. (40)

கபிலதேவர்செய்த இன்னுநாற்பது முற்றிற்று.

---

## 13. அகநானூறு.

Beginning:

கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன்மாலையன் மிலைந்தகண்ணியன்
மார்பின்ஃதே மையினுண்ஞா
ணுதலதிமையா நாட்டமிகலட்டுக்
கையதுகணிச்சியொடு மழுவேமுவாய்
வேலுமுண்டத் தோலாதோற்கே
யூர்ந்ததேறே சேர்ந்தோளுமையே
செவ்வானன்ன மேனியவ்வா
னிலங்குபிறையன்ன விளங்குவால்வையெயிற்
றெரியகைந்தன்ன வவிர்ந்துவிளங்குபுரிசடை
முதிராத்திங்களொடு சுடருஞ்சென்னி
மூவாவமரரு முனிவரும்பிறரும்
யாவருமறியாத் தொன்முறைமரபின்
வரிகிளர்வயமா னுரிவைதைஇய
யாகெழுமணிமிடற் றந்தணன்
றூவிறுணிழற் றவிர்ந்தன்று லுலகே.

வாழ்த்து—பாரதம்பாடிய - பெருந்தேவனுர் பாடியது.

வண்டுபடத்துதைந்த கண்ணியொண்கழ
லுருவக்குதிரை மழவரோட்டிய
முருகநற்போர் நெடுவேளாவி
யறுகோட்டியானைப் பொதுளியாங்கட்
சிறுகாரோடன் பயினெடுசேர்த்திய

கற்போற்பிரியல மென்றசொற்ரு
மறந்தனர்கொல்லோ தோழிசிறந்த
வேய்மருள்பணைத்தோ ணெகிழச்சேய்நாட்டெ
பொலங்கலவெறுக்கை தருமார்நிலம்பக
வழல்போல்வெங்கதிர் பைதறத்தெறுதலி
னிழறேய்ந்துலறிய மரத்தவறைகாய்
பறுநீர்ப்பைஞ்சுனே யாமறப்புலர்தலி
னுகுநெற்பொரியும் வெம்மையாவரும்
வழங்குநரின்மையின் வெளவுநர்மடியச்
சுரம்புல்லென்ற வாற்றவலங்குசினே
நாரின்முருங்கை நவிரல்வான்பூச்
சூரலங்கடுவளி யெடுப்பவாருற்
றுடைதிரைப்பிதிர் விற்பொங்கிமுன்
கடல்போற்ரேன்றல் காடிறந்தோரே.

எ - து—பிரிவிடையாற்ருளாய தலேமகள் தோழிக்குச் சொல்லி யது.—மாழலன்.

End :

பாலேவியமெல்லாம் பத்தாம்பனிநெய்த
லூனிமுல்லே நாடுங்கான்—மேலேயோர்
தேறும்இரண்டெட்டிவை குறிஞ்சிசெந்தமிழ்
னூறுமருதமவை.

இத்தொகையிற்பாட்டிற்கு அடியளவு பதின்மூன்றிற்கொண்டு முப பத்தேழளவுமுயரப்பெறும்.

"வண்டுபடத்துதைந்த" என்பது முதலாக "நெடுவெண்மார் பின்" என்பதீருகக்கிடந்த நூற்றிருபதுபாட்டும் களிற்றியானைநிரை. இப்பெயர் காரணப்பெயர்; செய்யுட்காரணமோ பொருட்காரணமோ வெனின், பொருட்காரணமெனவுணர்க. "நாநகையுடையநெஞ்சே" என்பதுமுதலாக "நாள்வலே" என்பதீருகக்கிடந்த நூற்றெண்பதும் மணிமிடைபவளம். இப்பெயர் உவமையாற் பெற்றபெயர்; செய் யுளும் பொருளுந் தம்முளொவ்வாமையால். "வானூறு" என்பது முதலாக "நகைநன்றே" என்பதீருகக்கிடந்த பாட்டு நூறும் நித்தி லக்கோவை. இவை செய்யுளும் பொருளுந் தம்முளொக்குமாகவின் (வழக்கத்தால்).................

இப்பாட்டாராய்ந்து தொகுத்தான் மதுரை - உப்பூரிகுடிகிழான் மக னுவான் உருத்திரசன்மன். தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி.

## 14. குறுந்தொகை.

Beginning;

தாமரைபுரையுங் காமர்சேவடி
பவளத்தன்ன மேனித்திகழொளிக்
குன்றியேய்க்கு முடுக்கைக்குன்றி
னெஞ்சுபகவெறிந்த வஞ்சுடர்நெடுவேற்
சேவலங் கொடியோன்காப்ப
வேமம்வைக லெய்தின்றாலுலகே.

என்பது—கடவுள்வாழ்த்து. **பாரதம்பாடிய பெருந்தேவனூர்.**

செங்களம்படக்கொன் றவுணர்த்தேய்த்த
செங்கோலம்பின் செங்கோட்டியானைக்
கழறொடி(டீஇ)ச் சேய்குன்றங்
குருதிப்பூவின் குலைக்காந்தட்டே.

எ - து—தோழிகையுறை மறுத்தது.—**திப்புத்தோளார்.** (1)

கொங்குதேர்வாழ்க்கை யஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇய நட்பின்மயிலியற்
செறியெயிற்றரிவை கூந்தலின்
நறியவுமுளவோ நீயறியும்பூவே.

எ - து—இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகளை யியற்கைப் புணர்ச்சிக்க ணிடையீடுபெட்டுநின்ற தலைமகனுணினிக்குதற்பொருட்டு மெய்தொட்டுப் பயிறல் முதலாயினவவள்மாட்டுநிகழ்த்திப் பாடுமாற் றூற்கூடிய தலைமகன் றனதன்பு தோற்ற நலம்பாராட்டியது.—**இறையனூர்.** (2)

End;

அடும்பினார்(ய்)மலர் விரைஇநெய்த
னெடுந்தொடைவேய்ந்த நீர்வார்கூந்த
லோரைமகளிரஞ்சியீர்ஞெண்டு
கடலிற்பரிக்குந் துறைவனொடொருநா
ணக்குவிளையாடலுங்கடிதன்
றைதெமக்கம்மமெய்தோய்நட்பே.

எ - து—வேறுபாடு கண்டிற் செறிக்கப்பட்ட தலைமகடன்னுள்ளே சொல்லியது. **அம்மூவன்.**

குறுந்தொகைமுற்றும்.

இத்தொகை முடித்தான் **பூரிக்கோ.**
இத்தொகை ப்பாடியகவிகள் இருநூற்றைவர்.

இத்தொகை நாலடிச்சிற்றெல்லையாகவும் எட்டடிப்பேரெல்லையாகவு ந்தொடுக்கப்பட்டது.

---

## 15. நற்றிணை.

Beginning:

* * *

அழிவிலர் (ா) முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலி(ப்)
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிது(ய) வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ,
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்ப லூரயா(நா)ஞ் செல்லு மாறே.

இது உடன்போகாநின்ற தலைவன் தலைமகட்குரைத்தது.—பாலைபாடிய பெருங்கடுங்கோ. (9)

End;

யாரை யெலுவ யாமே நீயெமக்
கியாரையு மல்லை நொதும லாளனை
யனைத்தாற் கொண்கவெம் மிடையே நினைப்பிற்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன
வோங்கற் புணரிபாய்ந் தாடு மகளி
ரணிந்திடு பல்பூ மரீஇ யார்ந்த
வாபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை யன்னவெம்
பெட்டணை யல்லையா னலந்தந்து சென்மே.

* * * *

இத்தொகை ஒன்பதடிச் சிறுமையாகப் பன்னீரடிகாறு முயரப்பெற்றது.

இத்தொகை தொகுப்பித்தான் பன்னுடுதந்த பாண்டியன் மாறன் வழுதி.

---

# NOTES.

*Page* 24.—I am obliged to Mahāmahōpādhyāya Haraprasada Sastri, the learned Professor of Sanskrit, Presidency College, Calcutta, for the following information. The word वन्द्यघटी is modified as बाडुरी and is the name of a village lying in the Rādha country in the Murshadabad district. This village was granted to one of the fifty-six descendants of the five Brahmans brought by Ādisura from Kanauje about a thousand years ago. The higher class of the descendants of the Bandighaṭi Brahmans are known by their titles as Banarjis. Raghunandana, one of the greatest Smṛti compilers of Bengal, styles himself Bandighaṭīya Hariharātmaja.

The term Ārtihara, which occurs among the titles of Sarvānanda, the author of the Ṭīkāsarvasva, is well known in Bengal and occurs in the Kulapanjis or family records of those families and denotes a person who has married a girl of superior status. The corresponding words are Khemahara, which denotes a person who has married a girl of equal position, and Uchitahara, which is applied to a person who has married a girl of lower position.

The word Banarji is to be derived from Bāḍuri ojha. Bāḍuri has been already shown to be a corruption of Bandighaṭi; and Ojha is a contraction of the Sanskrit word Upādhyāya and is, as such, connected with the Tamil and Malayalam word Ochchan, a temple priest, Kan. ója and Tel. ojja.

# INDEX OF THE NAMES OF WORKS, AUTHORS, KINGS AND OTHER HISTORICAL PERSONAGES.

[The numbers refer to pages; those marked with a † (dagger) occur in the Tamil portion; those underlined are names of works that are noticed or have extracts from them included in the volume.]

* M. stands for Madurai.

* M. stands for Madurai.